*[இப்பொழுது ராம பிரான், சீதா தேவியோடு, அங்கு வந்து நிற்பதைப் பார்க்கிறான் துளசி*

*அந்தணர், கை கூப்பியபடி எழுந்து நிற்க, துளசி 'ராம! ராம்!' என்று கூத்தாடுகிறான் ]*

**துளசி :** கண்டு கொண்டேன் என் கருமணியை, அவன் கண்ணிற பாவையோடு, கமலச்செல்வியோடு! வனவாசம் கண்டவன், என் கிருகவாசம் நாடி, இங்கு வந்து நிற்பதைக் கண்டு கொண்டேன்! முனிவர்கள் வண்டுகளாக மொய்க்கும், அவன் இருபாத மலர்களைக் காண்கிறேன்!

மூவுலகமும் இங்கு அடக்கம் என்பதைப் போல, மூன்று மடிப்பு கொண்ட, அவன் அழகான வயிற்றைக் காண்கிறேன்!

சுழித்து ஓடும் யமுனையின் வளைவை, அந்த அழகை, இங்கும் காண்கிறேன்!

மருக்கொண்ட மாலையைக் காண்கிறேன்! அதில் ஒளி விடும் மணிகளை ஆரமாகக் காண்கிறேன்!

யானையின் துதிக்கை போல, நீண்ட வலிமையான கரங்களைக் காண்கிறேன்!

சங்குக் கழுத்தை இந்தச் சர்வேஸ்வரனிடம் காண் கிறேன்!

கமலக் கண்கள், பவள இதழ்கள், பளீரென ஒளிவிடும் பற்கள், மோகத்தை வேகப்படுத்தும் மூக்கு, அணிக்கு ஓர் அணிகலன் என்பதுபோலக் காதணி அணிந்த திருக்காதுகள், வில்லாக வளைந்து நிற்கும் புருவங்கள், திருநாமம் தரித் திருக்கும் திவ்ய தேசமான திருநெற்றி, இவற்றையெல்லாம் பார்க்கின்றபோது, நிலவின் ஒளி, எனக்கு நெருப்பாகத்தான் தெரிகிறது!

அம்மையையும் அருகு காண்கிறேன்! பெண்மையைக் காண்கிறேன்! அதன் பேச இயலாப் பெருமையைக் காண்கிறேன்! ஊற்றெடுத்த இந்த உவகைப் பெருக்கோடு, இப்பொழுது ராம கதையைப்பேசத் தொடங்குகிறேன்!

## காட்சி-539

*வானம*

[வானததிலே ஆஞசநேயரின விஸவருபக காட்சி தெரிகிறது ]

***பின்னணிக்குரல் :*** *பாடினான துளசி, பாமரனும ராமன கதையைத தெரிநது கொள்ள!*

*இம் மணணிலுள்ள கவிஞர்கள் எல்லாம், தஙகள மொழியில கோசலை மைநதனைப பாடினா*

*ஆஞசநேயரின எணணம இதுதானே! வண்ணமுற இது நிகழததானே, அவா வலம வநது கொணடிருககிறார்!*

*ராம நாமத்தை எங்கும முழஙகச செய்கிறாா! தாமத்திறகு வாழவை, வளமாக அளிததுக கொணடிருக்கிறார்!*

*கலியின வலியொடுஙகத, தன கருணையை, உயிாகளுக்கு வழஙகிக கொணடிருககிறார்!*

## காட்சி-540

*பலஷேக்ஷததிரஙகள*

***பின்னணிக்குரல் :*** *ஊர்தோறும, ஆஞசநேயருககுக கோயில எடுதது, அவரைக்குமபிட்டு, மனம் குளிர்கினறனர் மககள*

*[பல ஆஞ்சநேயர் கோயிலகள் காட்டப்பெறுகின்றன ]*

***பின்னணிக்குரல் :*** *தடை பல கடநது, ராமனுக்கு வெற்றியைத் தேடித் தந்தவரை, வடைமாலை சாத்தி வழிபடுகின்றனர்*

[அவவாறு வழிபடுவது, காட்டப்படுகிறது ]

***பின்னணிக் குரல் :*** *தனக்குப பரிசளிதத முத்து மாலையை உடைதது, உள்ளே ராமா இருக்கிறாரா, என்று பார்த்தவா ஆஞசநேயர்*

*அதை நினைவூட்டும் பானமைபோல, வடையிலே துளையிட்டு, அதை அவா கழுத்திலே மாலையாகக*

கோததுத் தொங்கவிட்டு, துளை வழியே ராமபிரானைப பாரககலாம எனற தோரணையிலே, இந்த வழிபாடு, உரிமை யோடு, மகிழ்ச்சியோடு செய்யப்படுகிறது

வெற்றிலை மாலையிட்டும, இநத வீரனை வணங்கு கிறார்கள

[அவவாறு வணஙகுவது காடடபபடுகிறது ]

***பின்னணிக் குரல் :*** அசோகவனததில் சீதாதேவி, அனுமனை வாழ்த்ததும்போது, அவா சிரசிலே, வெற்றிலையைப போட்டு வாழ்த்தியதாக, ஒரு கதை, நம மக்களின் செவிகளில் சேர்நதிருககிறது அதன காரணமாக, வெறறிலை மாலை யிட்டுத தாமததின தனிக் காவலனை ஆராதிககும் பழக்கம் இருககிறது

வெண்ணை சாததி, ஆஞ்சநேயரை வழிபடுவதும் விசேஷமாகும்!

[அவ்வாறு வழிபடுவது காடடப்படுகிறது ]

***பின்னணிக் குரல் :*** ராம நாமததால, வெண்ணைபோல் உருகுபவர் ஆஞ்சநேயர்

அநத வெண்ணையை அவருக்குப படைககும்போது, ராமநாமம், நம் நெஞ்சிலே கூததாடும்!

இநதப பகதி கோலாகலததைக் காணத்தான், இந்த வழிபாடு

ஆஞ்சநேயரின் திரு உருவிலே, வாலிலே, குங்குமப் பொட்டு வைதது, வழிபடும முறையையும் காண்கிறோம்

[அவ்வாறு வழிபடுவது காட்டப்படுகிறது ]

***பின்னணிக்குரல் :*** எண் சாண உடமபிற்குத் தலையே பிரதானம்-மறறவர்களுக்கு!

ஆஞ்சநேயருக்கு, வாலில் வல்லமை அதிகம்! லஙகையை எரியூட்டியது அநத வால்தான்! எதிரிகளைச் சுருட்டி வீசியதும், அநத வாலதான்! அதைப்பொட்டிட்டுப் பூஜிப்பதால, நினைதத காரியம் கைகூடும் என்ற நம்பிககை யால், இவவழிபாட்டை நிகழ்த்துகினறனர்

புலன அடககம, ஆஞ்சநேயா. இநதப் பூமிககுத தருகினற பாடமாகும்

பேய, பிசாசு, பிலலி சூனியப்பகை, இநதட பெருமானைக கணடால, விட்டு விலகும்

ஆஞ்சநேயரைத் தொழுதவர்க்குத தோலவியிலலை! இவர் சநநிதியில திரளும பகதர்களே, இதற்குச் சானறு!

## காட்சி-541

*ஒரு மணடபம*

[ஒரு மணடபததில 'ராம! ராம!' எனறு பாடிப பகத பெருமககள ஆடுகினறனா

இவாகளிடையே வேறு மானிட உருவில, ஆஞ்சநேயருமபாடி ஆடிக கொணடிருககிறாா இடை இடையே, தன சுய உருவிலும காடசியளிககிறாா ]

**பின்னணிக்குரல் :** பஞ்ச பூதங்களாகிய அஞ்சிலே ஒனறான வாயுவின் புத்திரன், அஞ்சிலே ஒன்றான ஆகாயத்தில் தாவி, அஞ்சிலே ஒனறான நீராகிய கடலைத தாணடி, ஆர உயிராகிய ராமனுக்காக ஏகி, அஞ்சிலே ஒனறான மண்ணின் மாதா பெற றெடுத்த அணங்கைக் கண்டு, அயலார் ஊராகிய லங்கையை, அஞ்சிலே ஒன்றான தீயை வைத்து அழித்தான்!

அநத ஆற்றல மறவன், ராமநாமம் சொலலும் பக்தர் களைக கருணையோடு காத்து, அவர்களுககுத துணை யாவான்!

வாழ்க அனுமன் புகழ்!

வாழிய ராமநாமம்!

வாழக வாழ்கவே, ஆஞ்சநேய வழிபாடு!



## ஆசிரியரின் பிற நூல்கள்

அற்புதர் இராமானுஜர்

பாண்டுரங்கன் தரிசனம்

ஆழ்வாரும் ஆண்டாளும்

108 திவ்ய தேசங்கள்

ஞானசௌந்தரி

